தாங்கியவலையிற்பட்டுச்சாவதேதக்கதென்று
போங்கடுவிசையிறசென்றுபொள்ளெனவீழ்ந்ததன்றே. (௧௫)

இடுக்கண்வந்துற்றதென்னவிதையினித்தப்புமாறு
பொடுக்கெனவலையைக்கொண்டுபோவதேகருமமென்று
திடப்படச்சொலக்கபோதசசேனைகளொருங்குகூடி
எடுத்துநீளவலையைக்கொண்டேயேகினவிசும்பினம்மா. (௧௬)

வேடனுமதிசயித்துவிரைந்துபின்னடர்ந்தோமாகில்
ஓடியேயிளைத்துவீழுமொருங்குடன்வளைந்துகொண்டு
சாடலாமெல்லாமென்றுதன்மனத்தெண்ணிக்கொண்டே
ஓடினன்கண்ணிற்காணாதோடினபுறக்களன்றே. (௧௭)

காகமுங்கூடியோடக்கானவன்களைத்துமீண்டான்
ஏகினகபோதமன்னனெமதுாற்றோழனை
ஆகுவாமிரணியன்வாழடவிபுகுதுவேயப்பாற்
போகலாகாதென்றநகேபொருந்திவந்திறங்கும்போது. (௧௮)

இரணியன்கண்டுகூட்டமேதெனவளையிற்செல்லக்
கரவுறுவளையிலந்தக்கபோதமுமூக்கைவைத்து
விரகுளநண்பாவென்றுவிளித்தலுந்தெரிந்துவந்து
பரவியேதுகண்ணிபட்டவாறெவனோவந்தோ. (௧௯)

இறந்ததுநிகழ்ந்ததும்பின்னெதிர்வதுமானகாலம்
அறிந்தநீயேதிறலேயடர்வலைப்பட்டாயென்னச்
சிறந்தபேரறிவினாலுஞ்செப்பியசமர்த்தினாலுந்
துறந்தவர்யாவர்சொல்லாய்தொல்லைவல்வினையைத்தானே. ()

எவ்விடத்தெக்காலத்திலெவ்வகைக்காரணத்தின்
எவ்வளவெவராலேதானிருவினையனுபவங்கள்

அவ்விடத்தக்காலத்தினவ்வகைககாரணத்தின்
அவ்வளவவராலேதானனுபவமெய்துமன்றே. (உக)

என்றுதான்கபோதஞ்சொல்லவிரணியன்கடலெண்மீனும்
தூன்றுமாகாயப்புள்ளுந்தொடர்வலைப்படுதலாலும்
குன்றுமேனோர்களிறுமவெய்யகொலைபயிலரவுதானும்
நின்றுகட்டுண்டுநெஞ்சநிலைதளர்கிறத்தினாலும். (உஉ)

வானுறுசுடர்கள்பாம்பால்வருந்துதலானுமிக்கோ
ரானநற்புலவர்தாரித்திரத்திலைமூழ்கலானும்
ஈனராமறிவிலார்பாலிருநிதிசேர்தலானுந்
தானிருவினையையாரார்தள்ளுதலரிதேயென்றும். (உ௩)

இன்னநன்னீதிசொல்லியிரணியனிரங்கிநன்பன்
தன்னிருகாலிற்பூண்டதளையுடன்சேணைக்காலில
பின்னிபலவலையுஞ்சின்னபின்னமாக்கடித்துவிட்டே
பன்னியவுபசாரங்கள்பகர்ந்துபின்னனுப்பிற்றம்மா. (உச)

ஏகினபுறாக்கண்மற்றவ்விரணியன்வளையிற்செல்லக்
காகமிங்கிவைகளெல்லாங்கண்டேயிநண்பன்மேலே
மோகமாய்வளையின்வாயின்முகத்தைவைத்தழைத்தலோடும்
ஆருநீயாரேயென்னையழைத்தகாரியமேதென்ன. (உரு)

யானொருகாகமென்பேர்லகுபதனன்றுனென்பார்
கானவருவலைநீக்கபோதமன்னவன்பின்வந்தேன்
மானமுங்குணமுநட்புமிசையுமுறவுங்கண்டு
நானுமுன்னன்புகொள்ளநாடியேயழைத்தேனென்ன. (உசு)

தின்னிரைநாளுங்கொண்டுதின்பவனீயுங்கூடி
இந்நிலந்தன்னினட்பாயிருந்திடலாபத்திற்கே

மன்னியவிடமதாகும்வருநரிநட்புதன்னால்
முன்னமோர்வலையிலேமானபட்டிடுமுறைறமைபோன்றே. ()

தீங்கெனக்கெய்துமென்றுசெப்பலுஞ்சிறுமையேய்தி
ஓங்குமான் வலையிற்பட்டவிதந்தனையுரைத்தியென்று
ஏங்கஃபில்காகமென்னுமிலகுபதனன்றன்கேட்கத்
தேங்கியவுவகையோடுந்தீரெலியுரைக்குமன்றே. (உஅ)

நரியால் மான் வலையிற்பட்டகதை.

வளமுறுமகதநாட்டிற்சண்பகவனத்தின்மன்னி
யுளமகிழ்கொடியுமானுமுறவுகொண்டிருக்குங்காலைக்
கொளுமிளம்புலமான்மான்மெய்கொழுத்திடுமியல்புநோக்கிக்
களமிகுநரியொன்றுள்ளக்கடத்தாற்கொல்லவெண்ணி. ()

துன்னியமான்பாற்சென்றென்னண்பகேசுகமோவென்ன
அன்னதைக்கேட்டுநீயாரென்றலுமரியேயாயானிக்
கொன்னுறுவனத்தில்வாழ்வேன்குத்திரபுத்தியென்பேர்
பன்னியகிளையொன்றில்லாப்பாவியாய்த்திரிந்துநின்றேன் ()

இன்றுனைக்கண்டுநெஞ்சத்தெய்தினேனுவகையிப்போ
தின்றிருப்பணிசெய்துன்பாலுற்றிடவிழைந்தேனென்ன
நன்றெனவிசைந்திரண்டுநண்ணுஞ்சண்பகத்தின்கீழே
துன்றினவதன்மேலுற்றசுபுத்தியாங்காகங்கண்டே. (௩க)

மித்திரமானேநின்பான்மேவினோன்யாவனென்னப்
பத்தியிற்சினேகஞ்செய்யப்பட்டார்ந்தசம்புகனென்றோத
அத்தகையான்றன்செய்கைகுலத்தொடுமாராயாமல்
மத்தியத்திடமாமீகைதகாததுவழங்கல்செய்தால், (௩உ)

தருவுறுமொருபூனைக்குச்சரற்கவனென்றுகூறங்
கழுகிடங்கொடுத்திறந்தகணக்குப்போன்றுடியுமென்ன
வழுவிலக்கணதையெனக்குமரபினிற்சொல்லுகென்று
பழுதறுமான்விளைவப்பகாதருங்காகமன்றே, (௩௩)

## பூனைக்கிடங்கொடுத்துக் கழுகிறந்தகதை.

திரைகெழுகங்காதீரத்திரிகூடமலைப்பாலித்திப்
பருமரப்பொந்திற்கண்ணும்மைத்தகூர்நகமுமில்லா
ஒருகிழக்கழுகுமற்றைப்பறவைகளுணவூரல்க
மருவுநாள்பார்ப்பையுண்பான்மார்ச்சாலம்வந்ததாங்கே. (௩௪)
அதைச்சிறுபார்ப்பெலாங்கண்டஞ்சிப்பேரிரைதல்கேட்டுப்
பதைப்புறுகழுகுநீரேன்பயமுறுகின்றீரென்ன
இதற்குளேபூனையுய்வதெண்ணியக்கழுகின்பாற்போய்
விதிர்ப்பொடுவணங்கநீயார்விளம்பெனப்பூனைகூறும். (௩௫)

## வேறு.

எனதுபெயர்நெடுஞ்செவியனெனக்கழுகுநீயிவண்விட்
டினதிடத்திற்கோடிலையேற்சாவாயென்றுரைத்திடலும்
நினதிடத்திலவருமென்றன்வரலாற்றைநீகேட்டுச்
சினவுகினுநன்றென்னச்செப்புமாலப்பூனை. (௩௬)
பேதமாஞ்சாதியினாற்பிராணிகளைக்கொல்லுவதும்
நீதியாலுபசாரநிகழ்த்துவதுநன்றன்றால்
ஆதலாலவனவன்றனுசாரந்தனைக்கண்டே
யாதுசெயத்தக்கதோவதுசெய்தலியல்பென்ன. (௩௭)
ஆக்கமிகுங்கழுகரசனதைக்கேட்டிப்பூனையினை
நோக்கியானீயிங்குற்றபடிநுவலென்னத்

தேக்குபுனற்கங்கைநதிதீரத்திற்றினந்தோறும்
ஆக்கையமிழ்ந்திடமூழ்கிச்சாந்திராயணமாற்றி. (௩௮

தங்குற்றேனீமிகவுந்தருமவானெனக்கேட்டே
இங்குற்றேனேனென்னிலவயதுமுதிரியற்புலவர்
எங்குற்றாரெனவினவியெய்தியறங்கேட்டிடுதல்
பொங்குற்றமரவென்றுபுகலுவரெந்நூலோரும். (௩௯

அறம்விடுத்திட்டேனைக்கொல்லவகந்துணிந்தாயில்லறத்தின்
திறமடுத்தோர்நடைநின்போறகண்டதிலைத்தெவருந்தம்
புறமடுத்துவந்தவர்க்குப்பரிந்திடுவருபசாரம
மறமடுத்துவெட்டுகின்றவருக்குநிழல்செயுமரமே. (௪௰

அதிதியெவன்பாலெய்திமுகம்வாடுமோவவன்றன்
பதிதருபுண்ணியங்கொண்டுபாவத்தையளிக்குவான்
மதிகொடியசண்டாளன்மனைக்கண்ணுறுங்கதிரெறிப்பான்
புதியரெவர்வந்திடினும்பூசிப்பார்பெரியோரே. (௪௧

என்றிசைப்பக்கழுகதைக்கேட்டியப்புமிறைசசிகளுந்திக
கொன்றுழல்வதமதுகுலக்குணமெனமுன்குறித்ததென
நின்றவண்மற்றதைக்கேட்டநெடுஞ்செவியன்றரைதொட்டு
நன்றுசிவசிவவென்றுநற்கரத்தாற்செவிபொத்தி. (௪௨

தருமநூற்பலதெரிந்துசார்ந்துவைராக்கியந்தீக்
கருமமெலாநீக்கினென்யான்கடுங்கொலையேபாதகத்திற்
பெரிதாகுமதுபுரியினரகடைவர்பெருங்காளின்
மருவுபலாதிகளுண்பார்மருவுவரோபாவமென. (௪௩

கடுங்கழுகுதெளியுமாறிவ்வாறுகட்டுரைத்து
நெடுஞ்செவியனும்பூனைநிலைத்ததன்வீடுற்றதன்பின்

மடம்படுபோர்ப்பினையுண்டுனைவகுத்லும்பறவையெலாம்
ஓடுங்குபறழ்காணுமற்றேடலறிந்தோடியதே. (சச)

புள்ளுகளக்கழுகிருக்குட்பொருந்தடைர்துபார்த்திடலும்
வெளவௌலுமபுஞ்சிறகுகளுமவிழுர்த்தறககண்டிதுகொன்ற
தெள்ளவினம்பார்ப்பையெனக்கொன்றதாலதையிதனுல்
உள்ளகுணர்தெரியாமலிடங்கொடாரொருவருக்குமு. (சரு)

என்னலுமங்நரியதுகேட்டிவற்குகீட்டுசெயும்
முன்னமேநின்னியல்புதெரியுமோமொழிதியெனைப்
பின்னர்மான்காகத்தின்மனமொறுபைபெறப்புரியத்
துன்னியவிம்மூன்றுமருத்தொடர்புகொடுநின்றனவே. (சசு)

ஆயதினந்தனிலொருநாண்மானைப்பார்த்தந்தநரி
மேயுமிளம்பயிருனககுவேண்டுமட்டுமருந்துமிடம்
நீயறிதியெனக்காட்டவன்றுமுதனெடியமான்
போயதனைமேய்ந்துபசிபோக்கியிருர்திட்டதுவே. (சஎ)

பயிரிட்டோனிதுகண்டுவலைகட்டப்பாராது
செயிரிட்டுமான்வழக்கப்படிசென்றுசிக்குண்டெண்
ணுயிரிட்டாண்பனலாதுயசசெய்வார்யாரென்று
தயிரிட்டமத்தென்னத்தனதுடனைஞ்சுழல்காலே. (சஅ)

வன்பினொடுநரிகண்டின்றெண்ணமெலாமவாய்த்ததினித்
துன்பறவின்றிதனெலும்டைத்தசைபினொடுசுவைத்துண்டே
இன்பினொடுமுறலாமென்றெணணிவாளாதிருப்ப
அன்புறுமான்கண்டிங்கென்றனைவிடுவியெனவரைய. (சகூ)

ாரியதுகேட்டின்றைக்கோர்விரததினாதலால்வெனில்
பரிகரிப்பனினதுதளைப்பகர்தருசோரொதலினுல

பிரியமுறுநட்பினர்க்கென்பிராணனையும்விடவல்லேன்
தெரிகிலேயோநீயென்றோர்செடியின்மறைந்திருந்ததே. (ருO
காகமதுமித்திரனைக்காணுமலன்றிரவு
சோகமுற்றெங்கணுந்தேடித்தோல்வலையிற்பட்டதறிந்
தூகமுடைமானேயிங்குற்றுழல்வதென்னெனலும்
நீகமுறுமுரைகேளாமையின்வந்தநிலையிதுவே. (ருக
நண்புகொண்டநரியெங்கேயெனவெனதுநல்விறைச்சி
உண்பதற்கோர்செடியின்கீழொளித்திருந்ததெனப்புகலப்
பண்புறுகாகங்கேட்டுப்பயிர்க்கதிபனுறுகின்றான்
மண்படுமாருயிர்கழிந்தவடிவம்போலுறுகெனலும். (ருஉ
நண்ணியவப்பயிர்க்கதிபனுயிர்கழிந்தநௌவியென
எண்ணியிதையிழுத்தங்குவலைகட்டுமெல்லையினில்
மண்ணின்விரைந்தோடுதலுந்தண்டமவன்வலிந்தெறியத்
திண்ணரியதோர்செடியின்கீழிருந்தநரிசிதைந்ததே. (ருங
ஆதலாற்புண்ணியமும்பாவமுமிங்கதிகரித்தால்
ஈதல்செயுந்தம்பயனென்றிசைத்தெலியுமிவ்வாறு
சாதலகன்மானுக்குச்சம்புகன்றனட்பினைப்போல்
ஓதரியநின்னுறவுமபாயோகமன்றெனவே. (ருச

வேறு.

அன்னதுகேட்டகாகமகங்கரைந்துரைக்குமையா
என்னைநீயுரைத்தாயென்றனியற்பினைசசிறிதுந்தேராய்
உன்னையான்கொன்றுதின்றாலொருகணப்பசிதீராதே
மன்னிநட்பாயிருக்கில்வாழலாமனேககாலம். (ருரு
சித்திரகிரீவனைப்போற்சேர்ந்தெனைநட்புக்கொண்டால்
எத்தனைநாளென்னுவியிருக்குமுள்ளளவுமுன்மேல்

வைத்தநண்பொழிவதில்லைமற்றிந்தகபடமல்ல
சத்தியமென்றுகாகஞ்சாற்றியேமேலுங்கூறும். (௫௬)

எறிதிரைப்பரவைநீரிலெரியுமோர்கொள்ளிபுக்கால்
செறிபுனல்வற்றிடாதுதீயவிந்திடுமவ்வாறே
அறிவுளாரிடத்திற்கோபமடைந்திடாதடைந்ததேனும்
உறுதியாமனத்திலேதானொறுத்தலையவிப்பரன்றே. (௫௭)

உரைசெய்காகத்தைநோக்கியுன்னதுபுத்தியென்றுந்
திரமிலைபுன்னைசேர்க்கிறசெய்கருமங்களாகா
புரைபடுமெனவேயென்றன்புத்தியுன்புத்தியூடே
வரையறக்கலந்தேயொருதவகையினட்பாவேனென்று. (௫௮)

கடலின்மேலோடுங்கப்பல்கரையின்மேலோட்டலாகா
படவிமேலோடுந்தேரைப்புணரியேலோட்டலாகா
திடமுடன்கூடாதென்றுஞ்சேர்வதுமில்லைசேர்ந்தால்
கெடுவதேயுறுதியல்லாழகேண்மையாதொன்றுமில்லை. (௫௯)

நாரியர்விருத்தர்சீலர்நியாயமுந்துட்டர்செய்யுங்
காரியநலமுமெய்யாக்கருதியோட்புகொண்டே
பேருலகத்திலின்பம்பெற்றவரில்லைதுன்பம்
சேருவர்மடியிற்பாம்பைசேர்ப்பவர்போலவென்ன. (௬0)

உள்ளதுதானேதுட்டருறவொருக்காலுமாகா
தெள்ளியோயீதோர்காக்கையென்றுநீசெப்பிடாதே
வள்ளலேநினக்குநானுன்மன்னுநட்பாவேனீதான்
தள்ளினாலுயிரிழப்பேன்சத்தியமென்றுகூறி. (௬௧)

மாந்தருக்கெல்லாநட்புவருந்திரவியத்தினாலே
போந்திடுபறவைக்கெல்லாம்புசித்திடுநிமித்தத்தாலே

காய்ந்திடு துட்டர்க்கெல்லாங்கண்டி தப்புத்தியாலே
தேர்ந்திடுபெரியோர்க்கெல்லாந்தெரிசனத்தாலேயெய்தும்.

நல்லவர் நண்டபோதேநட்பினராவர்பொல்லாப்
புல்லியர்தண்டத்தாலேபொருந்திநட்பாயிருப்பர்
மெல்லியலூசிகாந்தமேவிடுந்துண்டமான
வல்லிரும்பெரியில்வெந்து வருந்தியேயொட்டுமன்றே. (௬௩

நின்னுடையறிவுநெஞ்சினேயமுமுபாயமுங்கண்
டென்னுடைநட்புவேண்டியுற்றனை தருகேவந்தேன்
என்னுடையறிவுநெஞ்சிலிரக்கமுஞ்சகாயமுந்நீ
மன்னியிங்கறிதியென்றுவாயசவேந்தன்கூற. (௬௪

நன்றெனவிரணியன்றானைகமுகமாகிநட்பால்
ஒன்றுநாமிடைவிடாமலிருப்பமென்றனுப்பக்காகம்
வென்றிகொள்புலியிரத்தம்வீந்தமானிறைச்சிதானும்
தின்றெலிதனக்கோர்பங்குதினந்தினமளித்துவாழ்ந்த. (௬௫

அந்தநாடம்முளோர்நாளடவியிலிரைகளில்லை
முந்தவேயெனக்குநட்பாய்முயங்கிடுமாமையின்பேர்
மந்தரனவன்பாற்செல்லின்வாவியின்மீன்களெல்லாம்
தந்திடுநாமுந்தின்றுதருக்கியங்கிருக்கலாமே. (௬௬

என்னவேயெலியுநெஞ்சிலெனக்கொருகருமமுண்டாங்
கன்னதுதனைநின்னோடேயாங்குவந்துரைப்பேனென்னத்
தன்னிருகாலாற்கொண்டுதானும்வானெறியாற்செல்ல
மன்னியவாமைகண்டுவந்தெதிர்கொண்டிருந்தே. (௬௭

இற்றைநாள்வரையுநன்றாயிருந்தையோநண்பவென்றே
உற்றநற்கருமம்பேசியுபசரித்திருக்கும்போழ்தில்

மற்றெலியாதென்றுரைமவிறைவயர்ம்வருந்திமுன்செய்
நற்றவப்பயனல்வந்தலந்தருநண்பன்காணே. (சுஅ)
இங்கிவன்பெருமைசொல்லிலியாவரான்முடியுஞ்சேடன்
தங்குமாயிரநாவாலுஞ்சாற்றினுமுடியாதென்று
துங்கமாங்கபோதராசன்றுடர்வலைப்பட்டவாறும்
அங்கதைவிடுத்தவாறுமடைவுடன்சொல்லிற்றம்மா. (சுக)
சொலலலுங்கமடவேந்தன்றேமுனிங்கிவனேயென்று
நல்லுபசாரஞ்சொல்லிநண்புகொண்டிருகையாரப்
புல்லிமோந்தருகிருத்திப்பொருந்தியவிருந்துமிட்டே
எல்லையிற்களிப்பிலேறியிருந்திரணியனைநோக்கி. (எ0

எலி தன்வரலாறு சொல்லிய கதை.

உன்னிடமேதுநீயிங்குறைசரித்திரந்தானேது
நின்னிடம்விட்டுமிங்கேநேர்ந்தகாரணமேதென்ன
என்னிடநகரஞ்சம்பகாவதியென்பதீது
தன்னிலோர்தவசிமேவுந்தனிமடமொன்றுண்டென்றும். (
பெருவளைக்குள்ளிருப்பேன்பின்னகன்சன்னியாசி
தெருவெலாம்பிச்சைதேர்ந்துசிறிதுநான்புசித்துமீதி
ஒருசிறுபாத்திரத்துட்பெய்துவேறொன்றுன்மூடி
வருபரதேசிக்கென்றுவைத்தவனுறங்கும்போதில். (எஉ)
வந்துநானந்தச்சோற்றில்வயிறுகொண்டதையருந்தி
அந்தமாயோகிகையிலகப்படாதொளித்துக்கொள்வேன்
இந்தவாறனேககாலமிருக்குநாள்களிலேயோர்நாள்
புந்திகூர்ஞானிதன்பாற்பொருந்தினனொருசன்னியாசி. (எக)
பொருந்தியவவனுந்தானும்பொருவில்சாத்திரங்கள்பேசி
இருந்தனரனேகநேரம்யானும்வெம்பசியினாலே

வருந்தியென் வளையைவிட்டுவந்துபாத்திரத்திற்சோற்றை
அருந்தியசத்தங்கேட்டேயதட்டியேதுரத்திவிட்டான். (எச)
துரத்தியசூடாகன்னன்றேூமனங்கவனேநோக்கி
விரத்தனுயிருந்துஞானம்வினவியவுனக்கிப்போது
கருத்துவேறுறறதென்னகாரணமென்றுகேட்க
தெரித்திடுமுனதுசொல்யானனுதரஞ்செய்யகில்லேன். (எரு)
எலிக்கிந்தக்குதிப்பைக்கண்டேயென்மனம்வேறுயிற்றுப்
பலிக்குநானுமுன்றெடுத்த * பாத்தெலாந்தின்றுகொண்டே
கெலிப்புடனுளதிங்கையாகிட்டிஞைப்பிடிக்கக்கூடா
தெலிக்குளிப்படிநான்கண்டதில்லையென்றிரங்கிச்சொன்னன்.
அன்னவன்றன்னேநோக்கியதிதியவ்வெலியொன்றேயோ
பின்னேயுமுண்டோவென்னப்பேரெலியொன்றேயென்றான்
மன்னுகாரணம்வேறுண்டுமறையவன்றேவிக்கன்னன்
சொன்னகாரணம்போலென்றுசொல்லவக்கதையேதென்ன.()

**திதிசெய்த கதை.**

முன்னமேர்ாகரந்தன்னின்முழுமறையுபாத்தியாயன்
தன்னுடைமனையாளானசவுண்டிலிதன்னேநோக்கித்
தென்னமர்பருவந்தன்னிற்றிதிசெயவேண்டுமென்ன
அன்னவள்செலவுக்கில்லேயரிசியுமில்லேயென்றாள். (எஎ)
என்றலுமுபாத்தியாயனிருந்ததுகொண்டுசெய்தல்
நன்றதுவைத்துவேறேநாடினுள்வேடனேரி
பொன்றிறைற்போலப்பொன்றம்பொருளேயுமிழப்பமென்ன
வென்றிகொள்வேடனேரிவிளிந்தவாறவள்யாதென்ன. (எசு)

* பாத்து=சோறு.

வேடுவனொருவன்காட்டில்வேட்டைகள்கிடையாமற்போய்
வாடியேயநேகநாளாய்வனத்திலேதிரியவோர்நாள்
ஓடியமானின்பின்னேயுலர்சதையெய்துசொண்டு
நாடினன்சேரியாங்கோர்நறுபெருமபன்றிகண்டான். (௮௰)

இத்தைநாமெய்தோமாகிலிரண்டுநாட்கறியுண்டென்
றத்தையுமெய்தான்பன்றியவனையுங்கொன்றசாத
லுற்றதுநரியுங்கண்டுமூன்றாளிரையுண்டென்று
கொத்துவிஞ்ஞாண்கடிப்பக்குத்திடச்செத்ததென்றான். (௮௧)

உள்ளதுகொண்டுதன்கூழதவிராப்புசிப்போமென்று
தெள்ளியமறையோன்சொலைத்தேவியுமகிழ்ந்துவீட்டில்
எள்ளலாதொன்றுமில்லையிதைப்பிசைகசுருவியாட்டி
வள்ளலார்மறையோர்க்கெண்ணெய்வழங்கிநீராட்டவென்றே.

திலத்தையாய்த்தெடுத்துநீரிற்செப்பமாக்கழுவிப்பாயில்
உலர்த்தினளுலாத்தவந்ததூரிலிறகாகாசினைறு
நிலத்தினிலிறைப்பக்கண்டுநெஞ்சகங்கலங்கியோடிப்
புலத்தியனென்னும்வேதபூரணன்மனையிற்சென்றே. (௮௩)

அங்கவன்றேவிதன்னையழைத்துநான்பருப்பதீவேன்
மங்கையேயுள்ளுந்தந்துமாற்றெறுமாற்றங்கேட்டே
இங்கொருகாரணத்தாலெள்ளுக்குமாறறவந்தாள்
நங்கையேயென்றவ்வேந்தனுடியேவிசாரித்தானே. (௮௪)

ஆரணனறிந்துகொண்டானப்படிநாமுமிந்தக்
காரணமறிவோமென்றுகடுகியேகொட்டெடுத்துப்
பாரளையகழ்ந்துவெட்டிப்பார்க்கநாணேடிப்போனேன்
சேரவங்கிருந்தசெம்பொற்றிரளெலாமெடுத்துக்கொண்டார். ()

வேறொருவனை யில்லைவகிவெமபசிதனக்குமுன்போல்
சோறுநானருந்தப்போனேன்றுரத்திவந்தடித்தானின்று
காறுமங்கவர்மடத்தைதக்கருதவுமபயந்து,திஙகள்
ஆறுமோ்ராறுமவேறோரடவிபுக்கிருந்தேன்யானே. (௮௬)

திரவியந்தானேபுத்திதிரவியந்தானேவித்தை
திரவியந்தானேசுத்தந்திரவியந்தானேசித்தி
திரவியந்தானேசத்திதிரவியந்தானேமுத்தி
திரவியந்தானேயாதுஞ்செய்வதல்லாதுமுண்டோ. (௮௭)

சத்துவம்புத்திவித்தைசதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையேயில்லையாகுஞ்
சத்துவம்புத்திவித்தைசதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செலவமெய்திடிலெய்துமன்றே. (௮௮)

சுதியிலார்பாட்டுந்தங்கள்சும்மமில்லாதநாடும்
மதியிலார்கவியுநல்லமனவியில்லாதவீடும
பதியிலாரழகும்பாழேபார்க்கிலிங்கிவைபோலல்ல
நிதியிலார்களெகைவயும்பாழேநினைக்கின்மூவுலகினுள்ளும். ()

கதிரவனிலேபோற்கண்ணிற்காண்பனமறையுமாபோல்
நிதியமொன்றிலேயேல்யார்க்குநீதிமானுர்னமபோதம்
துதிபெறுகீர்த்தியாண்மைசூழ்ச்சிமந்திரவிசாரம்
சதுரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால். (௯௦)

வறுமையாலேயாசிக்கவருமவர்தமக்குமாவி
இறுமவர்தமக்குஞ்செய்யுமியற்கையொன்றேமெதன்னில்
உறுதிபோங்கைகால்சோருமுள்ளமுங்கலங்குமெய்யும்
குறுகியேநடுங்கும்வாயுங்குழறுநல்லறிவும்போமே. (௯௧)

பொன்னின்மேலிருந்துசோற்றைப்புசித்தனைபொன்னும்போ
இன்னமுமுனக்குவெட்கமில்லையோவென்றுகூடா [சசே
கன்னன்முன்சொன்னதென்றன்கருத்துளேவருத்தலாலே
நின்னைவந்தடைந்தேனென்னைநீயினிக்காப்பாயென்ன. (௩௨)
இரணியன்றன்னைநோக்கியிலகுபதனன்கலவியும்
திரமுடனவந்துசேர்ந்தசெல்வமுற்பிறப்பிலேயான்
பரவியதெய்வந்தந்தபாக்கியமன்றோவென்று
புரைவறநண்புகொண்டுபொருந்தியங்கிருந்துகொண்டே. ()
மந்தரன்மீன்கள்கொண்டுவரலகுபதனன்போகி
எந்தடைவேனுநல்லவிறைச்சிகள்கொண்டுசெல்லச்
சுந்தரவிரணியன்போய்சசோறுகொண்டேகவன்றம்
சந்ததங்கூடியுண்டுதருக்கியங்கிருக்குநாளில். (௩௪)

வேறு.

காணவேடனைக்கண்டுநடுங்கிய
மானினோர்கலைமானவணெய்தலும்
ஞானந்தானிலாநண்பனேயுளம
ஏனடுங்கினையென்றுவினவவே. (௩௫)
வெஞ்சமன்புரைவேடனொருவனே
நஞ்சவம்புகொண்டெய்யநடுங்கியே
தஞ்சமிங்கின்மையாலுமைச்சார்ந்தனன்
அஞ்சலென்றபயந்தருவீரென. (௩௬)
நல்லதுன்பெயர்யாதுரைவிலெனா
எல்லைமன்சித்திராங்கனெனச்சொல்வார்
சொல்லுந்தந்தைதாய்சுற்றமொன்றின்மையால்
புல்லுகானம்புகுந்துவருந்தினேன், (௩௭)

தந்தைதாய்தமர்நீவிர் நுந்தஞ்சமாய
வந்தமென்மிசைநண்புவைத்தீரெனில்
எந்தநாளுமுனமப்பிரியேனென
மர்தரன்முதன்முன்றுமவகுக்குமால். (௯௮)

நன்றநாபினிநால்வருங்கூடியே
ஒன்றசிந்தையராகியொருமையாய்
என்றுமவாழ்வதியலபெனவெண்ணியே
அன்றுமன்றமபயமளித்தவே. (௯௯)

நான்குமிப்படியாலுறவாகியே
ஆங்குளவகுமளவினிலோர்பொழு
தோங்குமாறிரைக்கோடியோர்காட்டினில்
தேங்குமீவடன்வலையினிற்சிக்கியே. (௧௦௦)

சித்திராங்கன்றிகைத்ததுகண்டுதான்
கத்தகாகத்தின்பாடைதங்காதுற
மெத்துமாமையுமூடிகமும்விரைந்
தத்திசைக்கணடைர்தைதக்கணடவே. (௧௦௧)

காக்கைசென்றெதிர்கூவிக்கதறியே
நீககண்வேடன்வலையினிற்சிக்கியே
நோக்குநவ்விருடங்கும்வருத்தத்தை
நீக்கவேணுநிமிடத்திலென்னவே. (௧௦௨)

கூடிமூன்றுங்குறுகிவலைக்குளே
வாடிநின்றமறிமுகநோக்கியே
பீடிலாவுமறிவிற்பெரியைநீ
ஓடியிவ்வலையுறறதென்றேவென. (௧௦௩)

பின்னைவேண்டினபோதும்வேடன்வந்
தென்னையாவியிறுத்திடுமுன்னமே
மன்னுகாலில்வலையைவிடுத்திடென்
றுன்றைமுடிகத்தோடுரைசெய்யவே. (க0ச)

என்னபீதியுனக்கென்றெலிசொல
முன்னைநான்குருளைப்பருவத்திலே
அன்னையோடுமடவியில்வைகினேன்
துன்னுவேடன்பெருவலைசூழ்ந்தனன். (க0ரு)

தாவியந்தவலைதனைத்தாண்டியோர்
கானில்வீழ்ந்தனன்கண்டுகடுங்கொலைப்
பாவியென்னைப்பிடித்துப்போய்ப்பட்டணக்
காவலன்மகிழ்காணிக்கையீந்தனன். (க0சு)

அந்தமன்னன்குமாரர்க்களித்தலும்
மைந்தர்சிந்தைமகிழ்ந்துகளிப்பிறல்
சந்ததம்விளையாடித்தருக்கியே
பந்தமிட்டுவைத்தாரப்பகலிலே. (க0எ)

மழைமுழக்கிவருதலுநாமுகம்
உழையினத்துடனோடித்திரிந்துபைங்
குழைமுறிப்பதெந்நாளெனக்கூறிநின்
றழுதரற்றினனன்னதுகேட்டலும். (க0அ)

என்னகாரணமோவறியோமிது
தன்னைநான்தடைசெய்வதுதன்மமன்
றென்னவெண்ணியெனைவிடுத்தாரினி
மன்னர்நாணிவ்வனத்தினிலுற்றனன். (க0கூ)

என்றுகூறியிரங்கவிரணியன்
வென்றிவேடன்விரைந்துவருமுனம்
சென்றுகாலில்வலையைச்சிதைத்தலும்
கன்றுமானுங்கடுகிநடந்ததே. (௧௧௦)

தீமைவேடன்விரைந்துசென்றானெலி
பூமிவாய்வளைபுக்கங்கொளித்தது
வாமமேவுகொடிமரத்தேறவே
யாமைதானடையான்முட்டதானதே. (௧௧௧)

வந்தவேடன்மனந்துமயங்கியே
அந்தமானினடிதொடுத்தோடலும்
முந்துமாமைமுடங்கிக்கிடந்ததைப்
பந்தமார்வலைப்பையினிற்கட்டியே. (௧௧௨)

மானின்மேன்மனம்வைத்துமயங்கியே
ஆனவேடுவனாமைகொண்டோடவே
ஞானமார்கொடியைக்கண்டுநண்பனைக்
கானீங்குமுன்மீட்கக்கருதியே. (௧௧௩)

ஆருவேந்தனம்மாமையைக்கொண்டவன்
போகநாங்கண்டிருத்தல்பொல்லாதுமுன்
ஏகிமானொடுகூடியிதற்குமேவ
றாகமெண்ணுவம்வாவென்றுரைத்ததே. (௧௧௪)

என்றுரைத்தலுங்கேட்டிகல்வேடனை
வென்றுநண்பனிடர்விலக்காமலே
சென்றுநாமுயிர்வாழ்வதுதீதென
ஒன்றுநண்பிற்கொடியுமுரைத்ததே. (௧௧௫)

கோலமாரெலிநன்றெனக்கூறலும
காலினாலங்கிடுக்கிக்கணத்தினில்
சாலவேபறந்தக்கலைதன்னுடன்
ஓலவேயொருநன்மையுரைசெயும். (௧௧௬)

தந்துநீர்க்கரைதன்னில்விழுந்துநீ
செத்ததென்னக்கிடந்திடுசேர்ந்துனைக்
கொத்துவேனதுகொண்டவனுமையை
வைத்துநின்டமெடுக்கவருவனே. (௧௧௭)

ஆநதவேளையிரணியனுமையின்
பந்தநீக்கிவளைபுரும்பைட்புனல்
மந்தரன்புருநான்பறப்பேனவன்
முநதநீயுமொளித்திடுவாயென. (௧௧௮)

நல்லசூழ்ச்சிசொன்னையெனநண்ணியே
மெல்லநீர்க்கரைமானகலைவீழ்ந்தது
புல்லுநாகம்புசிக்கவிழுந்தபோல்
மெல்லவேயதன்மீதில்விழுந்ததே. (௧௧௯)

கண்டுவேடன்கலக்கந்தெளிந்திதைக்
கொண்டுபோதுமெனச்குலத்தாமையை
பண்டுநீர்க்கரைதன்னில்வைத்தோடினன்
பண்டுபோலெலியாசங்கடிக்கவே. (௧௨௦)

மானைவேடன்குறுகவம்மானொரு
கானில்வீழ்ந்ததுகாகம்பறந்தது
கூனலாமைகுளத்தினில்வீழ்ந்தது
ஞானமூடிகநல்வளைபுக்கதே. (௧௨௧)

வேடனோடிவிடாய்த்தவன்மீளவே
கோடிலாவியவாயசங்கூறவே
நாடிநான்குமங்கோரிடநண்ணியே
கூடிவாழ்ந்துகுலாவியிருந்தவே. (கஉஉ)

ஆதலானல்லவர்களுறவுபோல்
ஊதியம்பிறிதில்லையுயிர்க்கென
வேதியன்சொலவேந்தன்குமாரரும்
நீதியாமெனநேயம்வைத்தார்களே. (கஉ௩)

இரண்டாவது
சுகிர்லாபதந்திரம்
முற்றிற்று.

---

மூன்றாவது
# சந்திவிக்கிரக தந்திரம்.

இளம்பிறையாடக்கங்கையிருந்தியாடமன்றில்
வளம்பெறநடிக்குமெந்தைமலரடிகருதிமேலோர்
உளம்புனேமித்ரபேதவுபாயநற்சுகிர்ல்லாபம்யாம்
விளம்பினம்பிப்பாற்சந்திவிக்கிரகஞ்சொல்வோமே. (க)

அந்தணன்சுகிர்ல்லாபத்தினைடைவொமுறைப்பவேந்தன்
மைந்தர்கள்வினவிமிக்கமகிழ்வுடனிருந்துமூன்றாந்
தந்திரமென்றுசொன்னசந்திவிக்கிரகம்யாது
புந்திகூர்ந்துரைக்கவென்றுபுகலவேதியனுரைப்பான். (உ)

சத்துருவானபேர்கள்சரணமென்றடைந்தாரேனும்
மித்திரராகவெண்ணிவிரும்பிநட்பாகவொண்ணு
தெத்திறமென்னிற்காகமிளைத்ததுபோலவந்து
குத்திரமாகக்கோட்டான்குலமெலாமழித்ததன்றே.

### காக்கை கோட்டானை வென்றகதை.

என்னவக்கதையேதென்றானிருள்குடிகொண்டகாடொன்
றன்னதிற்பெரியதானவாலமாமரத்திலென்றும்
துன்னியகாகவேந்தன்றுகளறுமேகவண்ணன்
அன்னவன்சேனைகோடியமைச்சரோரைவராவார். (௪)
திகழுமுத்தீபிதன்சந்தீபிதன்றேசமெல்லா
புகழ்புரோத்தீபிதன்பின்புகலுமாத்தீபிதன்மேல்
நிகழ்சிரஞ்சீவியென்பார்நீதிமாதிரிகள்சூழ
மகபதிபோலமேகவண்ணன்வீற்றிருக்குநாளில், (௫)
அடுக்கவோர்மலைமுழைக்குளலகிலாக்கூகைதாழ
நடுக்கமொன்றுமின்றிநல்லமந்திரிகள்சூழ
இடுக்கணில்லாமலெய்குமிரவெலாம்வேட்டையாடத்
தடுக்கலாவுலூகமன்னனொருவனங்கிருந்துவாழும். (௬)
பகலெலாங்காகங்கூகைபதைத்திடவதைக்குங்கூகை
இகலிராமுழுதுங்காகமெழும்பிடாதடிக்குமிந்த
வகையிலேகிடந்துசிந்தைவருந்துநாடன்னிலோர்நாள்
தகவிராவதனில்யாமந்தனிலமைச்சர்களைநோக்கி. (௭)
கதிரவனெழுந்தாலந்தக்கூகையைவெல்லக்கூடா
திதுநலசமயமிந்தவிரவிலேவளைந்துகொண்டு
சதியினாலடித்திழுத்துச்சத்துருநாசஞ்செய்வோம்
மதியுடன்சேனைகூடிவருகவென்றெழுந்ததம்மா. (௮)

நன்றெனமகிழ்ந்தமைச்சர்நமக்கிதுவேளைதானே
வென்றிநாம்பெறுவோமெனறுவிரைவுடன்படைகள்கூட்டிச்
சென்றுபேராலைச்சூழ்ந்துசினத்துடனடித்துக்கொத்திக
கொன்றுதான்வெற்றிகொண்டுகூகைவேந்தடைந்ததன்றே. ()

அழிந்தனகாகசேனையாவெலாங்குருதிவெள்ளம்
வழிந்ததுசிறகுங்காலும்வயிற்றினிற்குடருமற்று
விழுந்துபின்யறறகற்குள்வேந்தனும்விழுந்தொளித்தான்
இழிந்ததுகங்குற்போழ்துமெதிர்ந்ததுபரிதிமன்னே. (௧௦)

இருள்மிடிவலவின்மன்னனெழுந்துதன்படைகள்பட்டுக்
கருமலைபோற்குவிர்ந்தகணமெலாம்பார்க்கவங்கே
பெரியமந்திரிகளாந்தும்பிழைத்தனசிலகாகங்கள்
தருவொடுமினத்தைநீந்துத்தப்பியேபிழைத்தவாங்கே. (௧௧)

பிழைத்தகாகங்களோடுபெரியமந்திரிகடம்மை
அழைத்துநங்காகமெல்லாமழிந்திடவென்னவேதன்
இழைத்தநாளிதுவோவென்றங்கிரங்கியேயழுதுகாயத்
துழைத்தகாகத்துக்கெல்லாமுற்றகாயங்கள்கட்டி. (௧௨)

செத்தகாகங்கட்கெல்லாஞ்செயயுமாறுரிமைசெய்து
தத்துநீராடிவேறோர்தருவினிலிருந்துவேந்தன்
துய்த்தலுந்துறந்துமிக்கசூழ்ச்சிமந்திரிகளென்ன
புத்திராமுய்யுமாறுபுகலுமினென்றுகூற. (௧௩)

சத்துருவினுமிக்காரைச்சார்ந்துசத்துருவைவெல்லல்
அத்திரங்கூடாதென்னிலவரையேதொழுதுநிற்றல்
சித்தமங்கிரங்காராகிற்றேசம்விட்டப்பாற்போதல்
இத்திறமுபாயமூன்றேயென்றுதீபிதனவின்றான். (௧௪)

காரியமுயற்சிபண்ணல்காலமுமிடமுமோர்தல்
சீரியதனமுமாளுங்கேடுதலொருவன்செய்த
காரியமதனுக்கொத்தகாரியந்தானுஞ்செய்தல்
பாரிலேசமாதானங்கள்பண்ணலைந்தாகுமங்கம். (உக)
சாமமும்பேதந்தானுந்தானமுந்தண்டந்தானும்
ஆமுபாயங்களென்காமறியுமுற்சாகமந்த்ரம்
பூமியிற்ப்ரபுத்வமென்றபுகன்றிடுசத்திமூன்றே
சாமியிங்கிவைகளெல்லாந்தானறிந்தவனேவேந்தன். (உஉ)
மேவிருகுணமுமங்கமெட்டாமிந்திடுமையர்துமெஞ்சில்
மேவியவுபாயநான்குமிக்கசத்திகளோர்மூன்றும்
ஓவறவிசாரித்தேசற்றவுசிதமானவைகளெல்லாம்
காவலர்கருத்திலெண்ணிக்கருமமங்கியற்றுவாரே. (உங)
வெலத்தவர்தம்மைசேரார்பேசியசமாதானத்தால்
கலந்தகவிருப்பதில்லைநாமினிப்பொரவுமாட்டோம்
சலந்தர்சேவகமுமாகாச்சந்ததஞ்சிந்தைநீங்காக்
குலப்பகைநமக்குடந்தக்கூகைக்குமென்றுகூற. (உச)
என்னகாரணத்தினாலேயிருவரும்பகைத்ததென்ன
மன்னவாகாக்கையார்தம்வாக்குத்தோஷத்தினாலே
பன்னுநங்குலங்களந்தப்பகையினாற்பட்டபாடு
துன்னியகழுதைவாக்குத்தோஷத்தாற்பட்டவாறே. (உரு)

## வாய்க்குற்றத்தாற் கழுதைகெட்டகதை.

எனச்சிரஞ்சீவிகூறயாதந்தக்கதைசொல்லென்ன
மனக்கபடானவண்ணான்வளர்த்ததோர்கழுதைமேலே
கனப்பொதியேற்றிவாவிக்கரையிலேதள்ளிப்பாசந்
தனைக்கொடுகட்டிப்போட்டுத்தப்புவன்புகலினெல்லாம். ()

கங்குலிற்புலித்தோலாலேகழுதையைமறையப்போர்த்தே
அங்கொருபயிர்ப்புலத்திலனுதினம்விடுவன்மேய
தங்கியசெந்நெற்காப்பார்தனிப்புலியெனப்பயந்தே
அங்கொளித்தோடிப்போவாரதுவுமேய்ந்தோடிப்போமே. ( )

புலிமிகப்பசித்ததேனும்புற்களைத்தின்றிடாதென்பார்
கலியினிற்புதுமைதானேகபடமோவென்னவெண்ணி
வலியவனொருவன்கையில்வல்லையந்தனைக்கைக்கொண்டு
பொலிகருகம்பளத்தாற்போர்த்துக்கொண்டொளித்திருந்தே.

விரைவொடுகழுதைவந்தவேளையிலெழுந்திருக்கக்
கரமதுகண்டுபெட்டைக்கழுதையென்றெண்ணிக்கொண்டு
குரன்முழக்கிடவேசத்தங்குறித்திவர்கழுதையாரே
வரவரவென்றுசொல்லிவாட்டினரிட்டியாலே. (௨[illegible])

கழுதைதன்வாக்கினாலேகடுங்கொலையுற்றதேதோ
முழுவதும்பறவைகூடிமுன்னமோர்கடகைதன்னைப்
பழுதறுமரசனாகப்பட்டமேகட்டிவைத்துத்
தொழுதினிவாழ்வோமென்றுசூழ்ந்தவந்திருக்கும்போது. ( )

பலபலசாதியானபறவைகளனைத்துங்கூடி
நலமதுதானேயென்னநனிமுதுகாகமொன்று
குலமிதுநல்லதல்லகுணங்களுந்தீக்குணங்கள்
நிலமிசைக்கோட்டானென்றுநிசிசரமெனுஞ்சொற்செல்லும்.

பகற்கெலாங்குருட்டுக்கண்கள்பார்வைக்குப்பிடிபடாவாம்
முகத்திலேயழகுமில்லைமொழியினுமதுரமில்லை
அகத்தினல்லறிவுமில்லையாருமிங்கிதையெண்ணார்கள்
சகத்திலேயிதன்பேர்சொன்னாற்சத்துருமிகுதியாமே. (௬௨)

மூவரின்முதல்வரானமுனிவனார்முடிமேல்வாழும்
தேவனைப்பகைத்துசிந்தைதசசெயலினையினித்தடுத்தே
மேவுதண்சுனைமேல்வைத்தவேட்கையைவிடுத்திந்நேரம்
போவதேகருமமென்றுபுத்திகள்பலவுஞ்சொல்லி. (௪௫)

இங்கிவையனைத்துநானேயியம்பினனுன்னைவேண்டித்
திங்களம்பகவனும்மேற்சினந்ததுகொஞ்சமல்ல
அங்கவன்சினமுநானேயாற்றுவனவன்பாற்சென்றே
வெங்கரிற்றினத்திறைமேமீர்கநீயென்றுகூற. (௪௬)

தூதியினரசுமந்தச்சசந்தனைநோக்கிநீசொல்
சந்திரனெனுந்தேவிந்தத்தடந்தனிற்குடைவதெப்போ
தந்தவேளையினில்வந்தங்கவனடிபோற்றியானும்
உய்ந்துமீண்டேகுவேனென்றேதனுமுயனன்றென்று. (௪௭)

அன்றிரவுடன்கொண்டேகியலைபுனற்றடந்திற்றோன்றும்
துன்றவெண்மதியின்சாயைசுட்டிநீகாண்கவென்ன
நன்றதைகண்டுதிங்களுதனையென்றஞ்சுற்றுவற்
றென்றியவுடுக்களன்னோற்குரியநன்மாதரென்றும். (௪௮)

ஆனையுநினைந்துநெஞ்சமழிந்துபின்றெளிந்துநின்று
நானிதையறியேனெங்களுதனைபொறுக்கவென்று
வானுயர்மதியைநோக்கிவணங்கியேமீண்டுபோகக்
கானுறுமுயல்களெல்லாங்களித்துவாழ்ந்திருந்தவன்றே. ( )

அப்படியாகநாமுமரசன்பேர்பெரியதாகில்
செப்பியபகைவந்தாலுஞ்செயிககலாமதுவுமில்லை
எப்படியரசநாட்டவினையந்துநீர்முகூர்த்தமிட்டீர்
தப்பிதுநினைந்தீரென்றுசாற்றியேபின்னுஞ்சொல்லும். (௫௰)

பாவிகண்மோனர்போலும்பலவிர்தியர்கள்போலும
ஓவறுசகாயர்போலுமுறமுறைச்சுற்றம்போலும
மேவுவரவரைச்சேரிக்மேன்மையரேனுமுயபார்
பூவையுமுயலுமுன்னோர்பூனையைச்சேர்ந்தவாறே (௫௧)

மைநாவும் முயலும் மோசம்போனகதை.

என்னவக்கதையதென்றேயினப்பறவைகள்வினவ
முன்னமோர்மரத்தின்மேலேமுயங்கிணையிருக்கும்போது
தன்னிகரின்றிவாழுந்தனிமுயலொன்றவந்தே
உன்னுமோர்பொந்திற்சேர்ந்தங்குட்புகுந்திருந்ததன்றே. ()
பூவையொன்றங்குவந்திப்பொந்துநாலிருக்கும்வீடு
நீவருவானேனென்னநிழலொடுதருக்கள்சாலை
வாவிநற்கூபஞ்செல்லுமவழியினிறந்தண்ணீர்ப்பந்தல்
சாவடியிவைகளெல்லாஞ்சகலர்க்குமபொதுவேயென்ன ()
அங்கவையிரண்டுஞ்சண்டையாகிப்பின்மத்தியஸ்தர்
தங்களைக்கேட்போமென்றுதனிமுயலழைத்துப்போக
இங்குநாம்வழக்காவந்தோமிருதலைவழக்குந்தீர்க்குந்
துங்கராரென்றுபூவைசொல்லவேமுயலுஞ்சொல்லும. (௫௪)
கருதியமுனையாற்றங்கரையிலேதவத்தைப்பண்ணும
பொருவில்கூர்ம்பல்லனென்னும்பூனையார்சொல்வாரென்ன
வெருவியேபூனைபக்கன்மேவிநாஞ்செல்வதெவ்வா
றுரையெனத்தூரநின்றேயுரைப்பமென்றழைத்துப்போக. ()
இருவரும்போனாரந்தவிருடியார்தவத்தைக்கண்டார்
பெரியவரிவர்தாநம்மைப்பிடிப்பதுசெய்யாரென்று
கருதினர்பணிந்தெழுந்தார்கைகளுங்கட்டிநின்று
பரவினர்யோகநீக்கிப்பார்த்தனர்பூனையாரும். (௫௬)

ஆரெரவர்நீங்கணம்மையறிந்துநீரிங்குவந்த
காரியஞ்சொல்லுமென்றுகட்டனுரைக்கத்தங்கள்
பேரொருவழக்குஞ்சொலலப்பெருகியாற்பினாலே
நீருரைப்பதுகேளாதுநெருங்கிவந்துரைக்கவென்ன. (௫௭)

சற்றிடங்கிட்டிவந்துசாற்றவிம்மாற்றங்காதில்
உற்றதுபோலும்பாதியுற்றதுபோலுங்கேட்டோம்
மற்றிவிப்பக்ஷபாதமாய்க்குநாமுரைப்பதில்லை
குற்றமிங்கொருவர்மீதிற்கூறிடற்கோடமாமே. (௫௮)

தருமமேவிரும்புவாரைத்தருமமேவிரும்பிக்காக்கும்
தருமமேயிகழ்வாரைத்தருமமேயிகழ்ந்துநிற்கும்
தருமமேமெய்யாயின்றுசகலமுஞ்செய்தலாலே
தருமமேசொல்வதல்லாற்சற்றுநாம்பொய்சொல்லோமே. ( )

எண்ணியவிரதமெல்லாமியற்றினையிவைக்குமேலாம்
புண்ணியவிரதமென்னும்பொய்சொலாவிரதமொன்று
நண்ணியவுயிரைக்கொல்லாலகந்தருவிரதமொன்று
மண்ணினிலனுஷ்டிப்போநாம்வழக்கிலோரஞ்சொலோமே. ( )

கிட்டநீர்வந்துசொன்னாற்கேட்குங்காதாம்மை
விட்டுநீர்தூரநின்றுவிளம்பினாற்கேளாதென்று
துட்டனார்மாரீசத்தாற்றலங்குசூர்ம்பல்லனென்பே
ரிட்டமாச்சாலன்சொல்லவிவைதமதுளத்திலெண்ணி. (௬௧)

மெய்கள்போற்சொன்னவெல்லாம்விசுவசித்திரண்டுஞ்செல்லக்
கைகளாற்பிடித்துக்கண்டங்கூடத்திரத்தங்குடித்தே
செய்கபடானபூனைசெருக்கியங்கிருக்கச்சேர்ந்த
மொய்சிறைப்பூவையோடேமுயலுமங்கிறந்தவன்றே. (௬௨)

ஆகையாற்புல்லியோரையடைந்திடற்கெடுவதல்லால்
ஓகைகூர்ந்திருப்பதில்லையுலகினிலினியேத
கூகையையரசாக்கட்டக்குறிப்பதுதீதென்று
காகமுமொழிந்துபோகக்கலைந்தனபறவைக்கூட்டம். (௩௩)
அன்றுமுதற்கொண்டின்றுகாறுமருங்கொடிக்குலத்தின்மேலே
துன்றியகூகைக்கூட்டந்தொடர்பகைகொண்டதென்ன
நின்றிகழுமைச்சன்சொல்லைவியந்திடக்கண்டமன்னன்
இன்றுநாமறிந்தோமந்தவிகலெனவுளத்திலுன்னி. (௩௪)
கூறியசூழ்ச்சியானகொள்கையுமறிந்துமெச்சும்
தேறியேயுரைத்ததெல்லாந்தெளிந்தனனெனக்கொண்டேகி
வேறுமோரிடத்தில்லைகிலேமவிசெய்யுமாறு
கூறுகபெரியோயென்னக்குறித்துமந்திரியுங்கூறும். (௩௫)
சந்திவிக்கிரகக்காலேதரியலரிடத்திற்சென்று
வந்துநான்சேருமட்டுமற்றுமோரிடத்திருந்து
சிந்தையில்வைத்துவேறோர்செயலுறாதடக்கிலிங்க
மந்திரம்பலிக்குமென்றுமையமட்டாப்புகன்றதன்றே. (௩௬)
ஆங்கதுகேட்டகாகவரசனமைச்சனைவெவ்வைப்
பாங்குளவுபாயமேதாபகரொணாவிறைவனேகும்
தீங்குளவஞ்சகர்மூவர்சேர்ந்தெதுமனுறமோவாருட்டைத்
தாங்கொளப்புரிந்தமோசந்தனைச்செய்துவைக்வேனென்றான்.

அந்தணனை வஞ்சித்த கதை.

அக்கதைதெரியச்சொல்லென்றவரகுணமைச்சன்கூறும்
மிக்கதோர்வேள்விக்காகவேதியனொருவன்சென்று
தக்கதோராடுகொண்டுதனதுதோண்மீதுதாங்கித்
தொக்கவுண்மகிழ்விலீண்டுதொல்பதிக்கேகும்போது. (௩௮)

வஞ்சகர்சூழ வரந்தமறையவஞ்ட்டைவெளவ
நெஞ்சினினினைந்தேயந்தநெறியிடையொருவன்முன்போய்ச
செஞ்சுடர்த்தீவளர்க்குஞ்செல்வநீநாயைத்தோட்கொண்
டஞ்சுதலின்றிச்செலலலாதகாதென்றுகூற. (சுகூ)

துட்டனைநோக்கியாகபசுவினைசசுணநகனென்றாய்
கெட்டனையோகண்ணென்றுகிவதியேமறையோன்செல்ல
இட்டனேபோலிரண்டாமிறிஞனுங்கெய்திமேலோய்
விட்டுயிரபோனகன்றைமேறகொளநகாதென்றேத. (எ0)

பழுதறுமறையோனந்தப்படியவன்றனையும்வைது
வழிதனிலேகமுனமுமவஞ்சன்வந்தந்தனனா
எழுதருநால்கவெலலாமிறிந்தசண்டாளமென்னும்
கழுதைபாசுமந்துசெல்லுங்காரியந்தகுமோவென்றான். ()

நாடியேமறையோனிந்தநரர்கள்வெவ்வேறுகூறக்
கூடியவுருவெவ்வேறுகொண்டுதோன்றிடுதலாலே
ஆடிராக்ஷதப்பிறப்போவென்னுமையத்தால்விட்டான்
நீடியவஞ்சர்கொண்டாரெனவுரைநிகழ்த்திற்றன்றே. (எ௨)

மேகவண்ணனுமகிழ்ந்துமிகுாதகாகங்களோடே
ஏகியோர்மலையினுசசியேறியங்கிருக்கவர்தக்
காகமந்திரியுங்கூகைகணத்தைதீஞ்சேருமாறங்
கேகுவோமென்னுமுன்னேயிரவிபோய்மறைந்ததன்றே. ()

மாலையம்பொழுதேகண்கண்மறைந்தனசிரஞ்சீவிக்குச்
சாலவேகூகைமன்னன்றன்படைமுழுதுங்கூட்டி
நாலுதிக்கிலும்வளைந்துநம்முடைக்கண்ணைத்தப்பி
ஆலின்மேலிருக்குங்காக்கையனைத்தையுங்கொல்வோமென்று.

வந்ததுகாக்கையொன்றுமரத்திலில்லாமையாலே
மந்திரிமாரைநோக்கிவாயசக்கூட்டமான
இந்தவன்பகையைவென்றோமினிமக்கெதிராரென்றே
சிந்தையின்மகிழ்ச்சியோடேசெருக்கியங்கிருக்கும்போது. ()
கள்ளமாயிதனைவெல்லக்கருதியங்கிருக்குங்காகம்
வெள்ளமாய்ப்பரவிவந்தமேவலர்ப்படையைக்கண்டு
கொள்ளையாயிறந்தகாக்கைகுறையுநின்றழியாமுன்னப்
புள்ளினுக்கரசன்றப்பிப்போனதேபோதுமென்று. (எசு)
சிறகுகளொடிந்திரத்தஞ்சிதறமெய்சோர்ந்துசாவு
குறுகினகாலம்போலக்கொடிப்பிணத்திரளுக்குள்ளே
மறைபடக்கிடந்துமொருசிலவருத்தமோடவஸ்தையாகி
முறையிடுவாரேபோலமொழிகளுந்தேய்ந்துகத்த. (எஎ)
கூகைமன்னவனுமர்தக்குரல்செவியுறத்தலைமேலே
காகமேதோகிடந்துகதறுகின்றதுபாரென்ன
ஏகியேதூதன்பார்த்தங்கெய்துகாக்கையைக்கொணர்ந்து
வாகுமன்னவன்முன்விட்டான்மன்னனீயாரையென்ன. (எஅ)

வேறு.

என்னுடைப்பேர்சிரஞ்சீவியென்பார்களுண்மேக
வன்னனுடைமுப்பாட்டன்றலைமுறையில்வந்தவனான்
சொன்னபுத்தியருமையினற்சுகமாகவீற்றிருந்தார்
அன்னவன்வாயிலிற்கொடியவமைச்சர்வந்துதலைப்பட்டார். ()
அங்கவர்கடுன்மார்க்கமரசனுக்குப்போதித்தே
உங்கள்குலத்தோடுபொரவொருமித்தாரிதையறிந்தே
இங்கிதுநீர்நினைந்தீரேலிடருறுவீரெனமறுத்தேன்
தங்கண்மதவலியாலேதாம்பொருதவந்தார்கள். (அ0)

மனமிரங்கியரசனுந்தன்மந்திரிகடமைவினவச்
சினமிகுந்தபுலிவலையிற்பிக்கிலதைவிடலாமோ
எனமொழிந்தாரிவர்தம்மிற்குருதிக்கண்ணனுமெண்ணறித்
தனையடைந்தார்தமைக்கோறறருமமலவென்றனனே. (அஎ)
தீத்தொழிலிற்கொடுங்கண்ணன்றனையினைத்தெவ்வர்வரின்
ஏறுத்தவர்கண்மனுநீதிமுறையுரைத்தவிதிப்படியே
காத்தருளக்கடவதல்லாற்கடுங்கொலைசெய்தவர்தமையும்
நீத்தவரையுங்காவேனீணிலத்திலென்றனனே. (அஅ)
மெய்த்தகொள்ளிக்கண்ணனைமந்திரியையவிறனையுமே
சத்துருவானாலும்வந்துதனக்கினிமையுரைத்தடைந்தால்
உத்தமரானவர்வரிசையுதவியவரையுயிர்காப்பார்
மெய்த்தபுகழோடுலகின்மேவிமிகவாழ்வாரே. (அகூ)

### கோமுட்டிக்குக் கள்ளனுதவிசெய்த கதை.

திருடவந்தகள்ளனுகருத்திரவியவான்கோமுட்டி
கருணையுடனுபசரிக்கக்கள்ளனுமோருதவிசெய்த
தொருகதையுண்டக்கதையேயாரையென்னவொருமையுடன்
பெருந்தநிதிபடைத்தானுகுபேரமித்ரனெனும்பெயரோன். ( )
வெள்ளரையன்றிரைகவுளன்விதிருடம்பனொருநோக்கன்
பெண்ணமுதமடவார்க்கெட்பிரியமிலாமுதிர்மூப்பன்
வண்ணமனையாளொருத்திமாரனிரதியைப்போல்வாள்
நண்ணிலனங்கவனைநெஞ்சினுடியவடுண்டாளே. (கூக)
எள்ளளவுமவன்மீதிலிச்சையிலாளோரிரவில்
கள்ளன்வரநடுநடுங்கிக்கணவனைப்போய்த்தழுவுதலும்
உள்ளமகிழ்ந்துன்றனாலேயுற்றவின்பம்பெற்றனனென்
வெள்ளநிதிமிகவுளநீவேண்டுவகொண்டேகென்றான். (கூஉ)

கள்ளனுமங்குளமகிழ்ந்துகன்னிபுனைத்தசூழ்வினதே
வெள்ளநிதியின்றனக்குவீட்டிமேலவிழுந்ததொக்கும்
உள்ளமகிழ்ந்தெங்காணுமுனையிவள் வந்தணையாமல்
எள்ளரியிருந்தால்வருவேனெனநினைப்பாயெனப்போனான். ( )
அன்றளவுமுதலாகவவள்பயந்துநடுங்கிமனம்
ஒன்றியிவனொடுகூடியுறங்கவவன்சுகமடைந்தான்
என்றுகதைசொலியிவனுக்கிதஞ்செய்தாலிதம்பெறலாம்
கொன்றதனாலேதுபலன்கொடும்பழியாமென்றதுவே. (௬௪)
தகவுபெறுகுருநாசனதனைநீசொலலென்ன
இகலினராயினுமடைந்தேயிதஞ்சொல்வார்தமைக்காப்பார்
நிகரில்பிராமணப்பேய்க்குரொடுஞ்சோரன்றனக்குமுன்னாள்
அகமகிழ்ந்துவெகுமானமந்தணன்செய்தானனமே. (௬௫)

வேறு.

தென்னாகதையேதெனவோர்திருநகரிலொருமறையோன
உள்ளமகிழ்வொடுவளர்த்தவுபர்காமதேனுவினைக்
கள்ளனொருவன்கருதிக்களவுகொள்வோமெனவந்த
நள்ளிருளிலோர்பிர்ம்மராக்ஷசனுங்கண்டானே, (௬௬)
கண்டவனீயாரென்னக்கள்ளனுநீயாரென்ன
எண்டிசையெண்ணும்பிரமராக்ஷசனெனவவனும்
மண்டுபொருள்கன்னமிடுமாசோரனென்றான்
என்றலுநல்லிரவிருளிலிங்குவந்ததேதென்றான். (௬௭)
சோரனுநீவந்ததென்னசொல்லெனவேயிர்தமனை
ஆரணவேதியனுடலையருந்தவந்தேனெனவரக்கர்
தீரனுமிங்கிவன்பசுவைத்திருடவந்தேனெனவிரண்டு
பேருமொருமித்துடனேபெரியவன்முன்றிலையடைந்தார். ( )

வந்தவிருவோருமவன்வாயிலிலேநின்றுகொண்டே
அந்தணனுயிரைமுந்தியருந்திடுவேனென்றும்
பந்தமுடனிருமிந்தப்பசுவைமுந்திக்கவர்வனென்றும்
இந்தவகைத்தங்களிலேயிகலுமொழிகேட்டலுமே. (கூகூ)
மிக்கமறையோனுமிவர்விவகாரந்தனையறிந்தே
மக்களுந்தானுங்கூடிவலியதடிகைக்கொண்டு
புக்கவிருவோர்தமையும்பொன்றவடிப்போமென்று
சிக்கெனவாயிலிற்கதவைத்திறந்துபுறப்பட்டாரே. (க00)
மறையவனேநின்னுயிரைவதைக்கவந்தானிவனென்றும்
குறைவறநின்பசுக்களவுகொள்ளவந்தானிவனென்றும்
முறைமுறையாயிருவரிவர்மொழிந்துநின்றாரதுகண்டு
நிறைசுருதிமாதவனுமொஞ்சுகளிகூர்ந்தனனே. (க0க)
அன்றுமுதலிருவோருமந்தணனுமுறவாகித்
தன்றனேவர்தமைப்போலச்சார்ந்தாட்டுற்றிருந்தார்கள்
இன்றிவனுக்குபகாரமியாமுஞ்செய்தோமாகில்
நன்றியல்லாற்றீதன்றாமகிவனுந்துணையென்றான். (க0உ)
இவையுரைத்துமன்னவகேளிடருழந்துதனையடைந்த
சவிமாடப்புறவுக்காத்தன்றசையைத்துலையிட்டான்
சிவிராசனெனவுலகோர்செப்புவதுமறியாயோ
தவறுமற்சரணமெனிற்றற்காத்தனெறியென்றே. (க0௩)

## தச்சன்கதை.

தச்சனொருவன்மனைவிதன்னுடுசோரனையுமெடுத்
துச்சிதமாத்தலையினில்வைத்துவனைகயொடுகூத்தாடி
மெச்சியதோர்கதையெனநீவிளம்புகவக்கதையென்ன
மச்சுலவுமாளிகைச்சூழ்வளாகமொன்றதிலொருவன். (க0௪)

பேரிரதகாரனெனும்பெருந்தச்சனென்றேவி
சோரனெனு நவனைக்கூடிக்கலங்காணத்தச்சன்வந்து
சேரிலவன்மீதிலன்புசிறிதுமிலாளிதென்ன
காரணமென்றுங்கவறாட்கருகிவிசாரித்திருந்தே. (௧௦௫)

வேறொருவன்றேணசையைவிரும்பிணமக்கண்டளவில்
சீறுதலாற்கரதாலந்திறிதுரிலியெனத்தச்சன்
தேறியதைச்சோதிக்கச்சித்தமேயோருர்ச்சுருச்
சேறலெனப்புறப்பட்டுச்சென்றிரவின்மீண்டனனே. (௧௦௬)

கட்டிலின்கீழொளித்திருந்தான்காரிகையுஞ்சோரனுக்காள்
விட்டவனையழைப்பித்துமேவுதலுமவன்கால்கள்
பட்டனதன்னுடன்மீதிற்பாவையதுகண்டஞ்சி
நெட்டுயிர்த்துவிசாரமிட்டோரிறைதன்முகநோக்கி. (௧௦௭)

உனக்குமனமென்மேலோவுன்கணவன்றன்மேலோ
எனக்கழறவவண்மொழிந்தேயெவ்வனதோஷத்தாலென்
மனத்தையின்றுபெண்புத்திமயக்கிவந்ததொருபாவம்
எனக்கவனைதெய்வமவனிறக்கிலிறப்பேனென்றாள். (௧௦௮)

அந்தமொழிகேட்டலுமேயகமகிழ்ந்தூரதகாரன்
முந்திநினைத்துத்தன [illegible] ன்னவளைக்கூடினதும்
சிந்தையிலெண்ணுமலவர்சேருமஞ்சத்துடனெடுத்து
வந்துதலைமீதுபடவைத்துக்கொண்டாடினனே. (௧௦௯)

கண்ணாரவெளியற்றுங்காமபோலாக்கண்டுமேதை
எண்ணுமே [illegible] ர்வார் நங்கையிதந்தசொன்னுளென்றலவோ
பண்ணுநூர்தோர்த்தச்சன்பரிவுற்றானிவன்மனத்தில்
கண்ணுரைப்பகைத்துவந்தானமக்கிவனேயுறவென்றான். ()

என்றுசொலப்பிரகாரநாசனைப்பார்த்தினியுரைப்பாய்
நன்றனைதுகருத்தையெனநல்லவர்போலெய்திடினும்
துன்றுபகையுற்றவர்க்குரகசியந்தோன்றுதடக்கல்
ஒன்றுதிறற்செய்கையென்றேயொருகதைநன்குரைசெய்யும்.

## ரகசியம்விட்டுப் பாம்புக ளிறந்தகதை.

விண்டுவன்மனென்னுமொருவேந்தன்வயிற்றுறுநோயால்
கொண்டுதுயருடன்மெலிந்தேயாத்திரையிற்குறிப்பினைவைத்
தெண்டிசையினுந்திரிந்தேயெம்பிரான்கோயிலொன்று
கண்டதனில்வசித்திட்டாங்கடவுளடியுளங்கொண்டே. ()

அப்பதியிலிருந்துலகையளிக்குமிறைபலியென்பான்
ஒப்பறுதன்புத்திரியரிருவரிலங்கொருத்திதனைச
செப்பியதீதாளத்தெண்ணிசெயிர்த்தாசவிண்டுவன்பன்
கைப்படநீர்விடுத்தளித்தான்காரிணககடவுடைபயினால். ()

கணவனேதெய்வமெனக்கருதியவன்றனக்கிசைந்த
பணிபுரிந்துபரதேசம்படரும்போதொருநாளினி
உணவுடனூக்குபகரணமூர்புகுந்துகொளப்போனாள்
பிணியுடையான்கண்ணுறங்கப்பெரும்பாம்பொன்றங்கொலிக்க. ()

அவ்வொலிகேட்டவன்வயிற்றினரவுமெலித்திடவிரவும்
வெவ்வியவாதம்புரிந்துமேவுதலுமப்போது
நவ்விவிழியிவன்றுணைவிநண்ணியொளித்ததுகேட்கக்
கவ்விவயிற்றரவினொடுபுற்றரவுகழறுமால. (கக௫)

பாவிநீயிவ்வரசபுத்திரனைப்படர்செய்யுந்
தீவினையென்னெனவுணவுசெறிந்தருடந்தனிற்சேர்ந்த

தாவறுமென்றனைநீக்கித்திடுவதென்னென்றதுசாற்ற
ஓவறுபுற்றரவமவன்கடுகுதின்றுமொழிகுவைநீ. (ககசு)

சுகமடைவானரசனென்றுஞ்சொல்லவயிற்றரவுவெகுண்
டுகுவைநீவெந்நீராலெனவுரைக்கவிவ்விரண்டும்
பகர்தருநன்மொழிகேட்டபாவையுமவ்வாறுசெய
பிணிகைசெயுமவ்வரவிறக்கவேந்தனுமந்நோய்தீர்ந்தே. (ககஎ)

தன்னகரந்தனிற்சேர்ந்துதகவுபெறுமனைவியொடும்
இந்நிலத்தையாண்டிருந்தானதனாலிரகசியம்
அன்னியர்தேர்ந்திடப்புகலிலதனாலுந்துன்பமுறும்
என்னவிசைத்தொருவேடன்கதைபின்னுமியம்புமால். ()

## வேடன்கதை.

வனமொன்றிலொருவேடன்வளர்குருவிக்கூட்டினொடும்
இனமொன்றுவேட்டைகருவிகளுமெடுத்தேதிரியக்
கனமிருண்டுமழைபெய்யக்காற்றெழும்பவவனடுங்கி
மனமருண்டோர்மரத்தின்கீழ்வந்திருந்தானப்போது. (கககூ)

தங்குமதன்மேலிருந்தபுறாவொன்றுதன்பேட்டை
எங்ககன்றதோவனத்தில்யாரேனும்பிடித்தாரோ
மங்கியதோவெனப்புகலவதுகேட்டுவனசரன்றன்
அங்கையுறுகூட்டினுற்றபெண்புறாவழுதுசொலும். (கஉ0)

முன்வினையாலிதுபெற்றேனாயினுநின்மனமடைந்த
இன்னவனுக்குபசாரம்புரியெனலுமெரிகொணுவி
அன்னவனையழைத்துடலின்குளிர்போக்கியாகாரம்
என்னையீயருந்தென்றுவீழ்ந்திறக்கவிவனோக்கி. (கஉக)

அன்பினைம்பொருட்டுவீழ்ந்தவிந்தையருந்தியிடில்
துன்பமவருமெனப்பேட்டைவிடுத்திடலுஞ்சூழ்ந்ததுவும்
தன்புருஷன்பிரிவதனால்வீழ்ந்திறக்கத்தருமிரண்டும்
இன்பமுறுதெய்வவுருவெய்திவானுலகடைந்த. (கஉஉ)
இரக்கமொடுவேடுவனுமெரியில்வீழ்ந்துகதியடைந்தான்
துரைகளுளர்களர்த்துசரணாகதியென்றுசாற்றுவார்க்கும
பரக்கவருள்செயிற்றுமேபொன்றவரினுமவருமென்
றுரைத்துப்பொன்னெச்சமிடுபறவைகதையோதுமால். )

பொன்னெச்சமிடு பறவைக்கதை.

பொன்னாகவெச்சமிடுமோர்பறவைபொருப்பின்மேல்
பன்னாளுமுறக்கண்டுபால்வேடனதைப்பிடித்து
மன்னவனிதைக்காணிலவாங்குவனென்னாவிருமெண்ணி
பின்னையந்துவேந்தனுக்கிப்பொருளைச்சொல்லியளித்தனனும்ப )
அவன்மணிக்கூட்டினிட்டுவளர்க்கவவைச்சனுமங்கதுமோர்கிப
புவியிலசம்பாவிதமாம்பொருள்கேட்டிப்படிபுரிதல
நவைபுறும்விட்டிடுதியெனவியந்துரைக்கநிருபதியும
கவலையறவிடுத்திட்டானீங்கியவக்கும்புள்ளும். (கஉ௫)
புரவலன்றன்மனைச்சிகரம்பொருந்தினன்முதன்முடன்
விரவுமிரண்டாமுடன்வேடனிவ்வரசன்
மருவுமூன்றாமுடன்மந்திரிநாலாமுடன்
சரதமெனவுரைத்தந்தக்களிப்பறவைநீங்கியதே. (கஉ௬)
ஆதலாற்பகைவரெனவறிந்திமேனோட்புவோன்
சாதலாகுமகிழ்வுதாளடைவாமென்றுரைப்ப
ஈதலாமுளங்கொள்ளாக்காசனிருந்திடநோக்கித்
தீதிலாவக்கூகைசிந்தைதிகைத்தேயுரைக்கும். (கஉ௭)

இற்றைநாள்காறுமிந்தவரசனிடத்தினிதிருந்தேன்
பற்றியிவ்வரியொருமலையிற்பயின்றிருத்தல்வேண்டுகின்றேன்
மற்றதுநீவினவிற்குகையைக்கூப்பிட்டோர்வன்னரிதான்
பெற்றசுகம்போலென்றுனக்கதையென்பேசெனலும். (௧௨௮)

**நரி சிங்கமோசமறிந்த கதை ௩.**

ஓரமேதடுமொருசிங்கமிக்குகையிலொளித்திருப்பின்
யிரவியின்வந்தொடுங்குமதுதனையுண்டுமிகுபசிதீர்ந்
தாயமடைவோமெனக்கருதியுற்றிடலுநரிவந்து
பரவுசிங்கக்காற்சுவடுபார்த்துச்சோதிக்கவெண்ணி. (௧௨௯)
குகையதனையிருமுறைதான்கூப்பிடலுமதுபேசா
வகைகண்டுமக்கஞ்சிவாய்விடாதிருந்ததெனப்
பகையுறுகேசரிநினைந்துடன்றுகுரல்வேறாகத்
குகையிலொடுமேனென்னச்சம்புவுமங்குண்ணடுங்கி. (௧௩௦)
அப்பாநானழைத்தேனென்றகன்றோடிற்றதலால்
எப்பாலராயினுநன்காராய்தலியல்பென்னத்
துப்பானமித்திரர்க்குச்சொல்லியயந்தாமந்திரியும்
இப்பாரினுறுந்தேயநோக்குவனென்றேகிற்றே. (௧௩௧)
அரசனவன்போனபின்னேயடைந்தகாகத்தினையே
வருகவெனவழைத்துவெகுமானங்கண்மிகசெய்து
நீருடையமந்திரிநீசிரஞ்சீவியென்றுபல
கருமமுமன்னவன்வசமாக்கட்டளையிட்டிருந்தானே. (௧௩௨)
அப்பொழுதுகாக்கையிலடிபட்டசிரஞ்சீவி
எப்படிநான்வைத்திருப்பேனிவ்வுடம்பைத்தீயிட்டே
செப்பமொடுகூகையெனச்சென்மித்துக்காக்கையெலாம்
தப்பறவேயடிப்பனென்றுசாற்றவரசனுஞ்சொல்வான். ( )

## எலிக்கதை.

இந்தமொழிசம்மதமாமேபனுரைத்தாய்சிரஞ்சீவி
முந்தியமேயாவினைமாற்றமுடியாதிங்கொருவருக்கும்.
அந்தவகைசொல்லுவன்கேளருந்தவமாமுனிவொருவன்
சிந்தையினினிட்டையொடுசேர்ந்தொருநீழலிலிருந்தான். ()

பருந்தெடுத்தபெண்ணெலியும்பருந்தின்வாய்த்தப்பியங்கே
இருந்தமுனிகரத்தில்விழவேயதனைமேனோக்கியவன்
அருந்தவத்தாற்பெண்பிள்ளையாக்கிமனையாள்கையிற்
பொருந்தவளரெனக்கொடுத்தான்பூவையுமங்கதைவளர்த்தாள். ()

அந்தமின்னைப்பெலவானுக்களித்திடுவோமெனமுனிவன்
சிந்தையிலெண்ணிக்கொண்டுசெங்கதிரோன்றனையழைத்தே
இந்தமின்னைநீகொள்ளெனவிரவியறிந்தெனைமறைக்கும்
முந்தியமேகம்பெலவான்முனிவவவன்கைக்கொடென. ()

மேகத்தையழைத்திவளைவிரும்புகநீயெனமுனிவன்
தாகத்தோடுரைக்கவவன்றானுமறிந்தெனைத்துகளாய்
மாகத்திலடிக்குமுயர்தவாயுபகவான்பெலவான்
மோகத்தோடவற்களித்தன்முனிவரனன்றென்றனுமே. ()

வாயுவையுமழைத்திவளைமணம்புணர்கநீயென்று
நேயமுடனிருடிசொலநினைந்திடுமாருதமறிந்தே
தூயவனேயெனைமறிக்குந்துங்கவரையேபெலவான்
சேயிழையையவற்கருளிச்செய்கவெனச்செப்பிடவே. (௯௮)

மலையரையன்றனையழைத்துமங்கைமணம்புணர்கவெனக்
குலவரையுமறிந்துகொண்டேகூறுமுனிதனைநோக்கி
நிலவறைபோயெனையறுக்கநினைக்குமத்தமூடிகமே
பெலமுடையததற்களித்தாற்பெருமையெனவரைகூற. ()

எலியரசன்றனையுமழைத்திவளைமணம்புணர்கெனவே
நலதிவளென்வளையில்வரநீடின்மணம்புணர்வனென
முலைமகளைத்தவமுனிவன்முன்னிருந்தபடி தானே
எலியுருவமாக்கிவிட்டானிசைந்தவனுங்கொடுபோனான். ()

ஆகையினால்யோனிதனையாருமழித்திடமாட்டார்
காகவடிவொழிந்தனனாதகருத்தினைத்ததுமுடிக்கும்
கூகைவடிவெடுக்கவன்றற்கூடாதுநாமனது
சோகமனதயகற்றிடுவோஞ்சுகமடைந்திங்கிருவென்றான். ()

அவன்மனதுவரநடந்தேயமைச்சர்களின்மேலாகித்
தவறறவேகுகைவாயிறன்வசமாக்கிக்கொண்டோர்
திவசமதிலமைச்சரொடுஞ்சேனையொடுந்தானுறங்கக்
கவடுசெய்தேகுகைவாயிற்கடையினிற்றீக்கொளுத்திவிட்டான். ()

[illegible]கையுடனேதீச்சூழப்பொருக்கெனக்கத்திரமெல்லாம்
குகையினுள்ளேமடிந்ததற்பின்கொடிகூகைமேல்வைத்த
பகைமுழுத்துச்சிரஞ்சிவிபறந்துசிங்கபலையிருக்கும்
இகன்மேகவண்ணனொடுமினத்தோடுஞ்சேர்ந்தனனே. (௧௪௩)

கண்டவுடன்மேகவண்ணன்கருத்திலடங்காமகிழ்ச்சி
கொண்டனன்மந்திரிகளுடன்கொடிக்குலமுற்றொழுதுநிற்கப்
பண்டுபழகாருடனேபழகியிந்நாளென்மனதில்
கொண்டபகைதீர்த்தாயேகொடிக்கரசேயெனச்சிறகால். ()

புல்விமுகத்தோடுமுகம்பொருந்தவைத்தேமோந்துகொண்டே
எல்லையிலாக்களிப்பினொடுமிருந்தவனையருகிருத்திச்
சொல்லிமுடியாதபெருந்தோத்திரங்கள்பலவழுத்திப்
புல்லியராம்பகைஞரொடுபொருந்தியவாறறிதெனவே. (௧௪௫)

செப்பரிய தம்பிகளுஞ் சேனைகளும் படைசூழ
ஒப்பரிய வரியணையுற் றுலகாளுநர் தருமனுந்தான்
தப்பிவருநாளுறைந்து சன்யாசி வடிவெடுத்து
மெய்ப்பொடு தன்னேவல் செயும் விராடனிடத் திருந்திலனோ. ()

புசபெலத்தால் வலிமையினாற் புகழ்பெற்ற திறல் வீமன்
வசையரசனடுக்களையின் மடையனென விருந்திலனோ
விசையனு நாடகசாலையி னுரையாட்டுவிக்கும்
திசைபெறு நாட்டு வணிகசிகண்டியென விருந்திலனோ. (௧௪௭)

நகுலனுமங்கவன் குதிரை நடைபழக்கு வானுகித்
தகைமையினு லொடுங்கியவன் றனைச்சேவித் திருந்திலனோ
புகழொடு முக்காலமறி புனிதனெனுஞ் சகதேவன்
இகழுமின பசுமேய்க்கு மிடையனென விருந்திலனோ. (௧௪௮)

எரிதழலிலவதரித்தே யிரவிகுலத்தினில் வளர்ந்து
விரிநிலவின் குலமடைந்த மின்னனையாள் பாஞ்சாலி
வரிவளைக்கை யுத்தரிக்கு மாலினியா யிருந்திலளோ
கருமமுற்று மளவுமவர் கருத்தடங்கி யிருப்பரென்றே. (௧௪௯)

மேகவண்ணன் சலிப்பாற்ற மீளவுமே வான்முனையில்
யோகமிருந்தவர் போலு மோங்கெரி புக்கவர் போலும்
நாகவளையுட் புகுந்து நண்ணினவர் போலுமன் றன்
ஆகம் வருந்தினையோ வென்றரற்றிடலுஞ் சிறுசீவி. (௧௫௦)

தேவநின தருளாலே தீவினையெலாங் கடந்தேன்
நீவிரவியிருந்த தலநீத்து வனவாசத்தில்
மேவியுன்றன் றிருமேனி மெலிந்ததெல்லா நான்செய்த
பாவமன்றோ வெனக்கூறிப் பரிவினுடனிருத்தலுமே. (௧௫௧)

